உ

சிவமயம்

சற்குரு நாதன் துணை

திருச்சிற்றம்பலம்

# குருவிற்கு சமர்ப்பணம்

ஆக்கம்:

தவத்திரு.**குமரகுரு சுவாமிகள்**

சென்னை.

*வெளியீடு :*

**விபு வித்யா பீடம்**, *பாடியநல்லூர், சென்னை 52*

*2010*

---

***28.02.2010***

***பாடிய நல்லூர், சென்னை,***

***விபு வித்யா பீட மூன்றாம் ஆண்டு***

***நிறைவு விழாவின் போது வெளியிடப்பட்டது***

ஓம்
தத் சத்
சற்குரு நாதன் துணை

## குருவிற்கு சமர்ப்பணம்

இந் நிலவுலகத்தில் ஏழு விதமான பிறவிகளில் மானிடப் பிறவி மேன்மையுடையதாம். அவ்வாறு மானிடராய் பிறந்த ஆண் பெண் இருபாலரும் தமக்கு உறுதிப் பயனாகிய மோட்சத்தை யடைவதே பிறப்பின் பயனாகும்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும் –குறள்

நிலவுலகில் நாம் வாழுகின்ற வாழ்க்கை முறையை ஒழுங்கு நியதிப்படி வாழ்வோமானால் வானுலகத்து வாழும் தெய்வத்தோடு ஒப்பவைத்து எண்ணப்படும்.
அவையாதெனில்:

| | |
|---|---|
| ஆத்மா எது? | அநாத்மா எது? |
| நிலையானது எது? | நிலையற்றது எது? |
| புண்ணியம் எது? | பாவம் எது? |
| சத்தியம் எது? | அசத்தியம் எது? |
| தர்மம் எது? | அதர்மம் எது? |

என்று மேற்சொன்னவற்றில் புத்தியைக் கொண்டு தீரவிசாரித்து வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகினால் பிறவித்தளையிலிருந்து விடுபடலாம்.

10-4

அடுத்து,

உற்ற நோய் நோன்றல் உயிருக்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு - குறள்

தனக்கு ஊழ்வினையால் ஏற்பட்ட துன்பத்தை பொறுத்தலும் பிற உயிர்க்கு எந்த வித துன்பமும் செய்யாமையுமே தவத்தின் வடிவாகும்.

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்'

இன்பத்தை ஒரு பொழுதும் விரும்பாமல் துன்பப் படுவது மனித இயல்பு என்று தெரிந்தவன் துன்பம் நேரிட்டபோது அவன் மனம் ஒரு துன்பமும் அடைவதில்லை

'வினைப்போகமே ஒரு தேகம் கண்டாய்
வினைதான் ஒழிந்தால் தினைப்பொழுது அளவு
நில்லாது கண்டாய்'

நமக்கு இத் தேகம் நல்வினை, தீவினை என்ற இரு வினைகளால் வந்தது. நம்முடைய பிராரத்த வினை இப் பூமியிலே முடிந்தவுடன் தினைப் போதும் காத்திராமல் கூற்றுவன் வந்து எடுத்துக் கொள்வான் என்பதை ஒருக் கணமும் மறவாது இருத்தல் வேண்டும். வினை என்பது மனம், வாக்கு, காயம், மூன்றின் வினைகளாகும். இதையேதான் திருமூலர் திருமந்திரத்தில்,

'தன்னையறிந்த தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்
சென்னியில் வைத்த சிவனருளாலே'

என்று பாடினார்.

தன்னை முழுதும் உணர்ந்த தத்துவ ஞானிகள் இந்த உடல் வந்ததற்கு மூலகாரணம் யாது? எதற்கு வந்தது? ஏன் வந்தது? என்று ஆராய்ந்து மூல அஞ்ஞானத்தின் முடிச்சை அவிழ்ப்பார்கள். இதற்கு வினைதான் காரணம் என்று அறிந்த பின்பு மேலும் மூன்று வினைகளை தம்மிடம் சேர வொட்டாமல் எச்சரிக்கையாக இருப்பார்கள். இவையனைத்திற்கும் சிவனுடைய அருளைக் கொண்டு தான் வினையை அறுக்க முடியும் என்று உறுதியாக இருப்பார்கள். ஆகவே நாம் புண்ணிய பாவங்கள் என்ற இரு வினைகளிலிருந்து எப்படியாவது புத்தியால் விசாரித்து அறிந்து கொள்ள வேண்டும். எப்படியெனில் முதலில் எந்த விதத்திலும் பாவ காரியங்களை, அதர்மங்களை, அசத்தியத்தை அறவே விட்டு விடவேண்டும். பிறகு எஞ்சிய புண்ணியகாரியங்களையும் நான்தான் (கர்த்தா) செய்தேன் என்ற அகங்காரமற்று ஈஸ்வரார்ப்பணமாக செய்யத் தொடங்கினால் புண்ணியமும் நமக்குச் சேராது. எனவே இந்த இரண்டு வினைகளையும் நீக்கினால் பிறவித்தளையிலிருந்து விடுபடலாம். இதையே கைவல்யம்,

10-4

நல்வினை பொன்விலங்கு, தீவினை இரும்பு விலங்கு என்பதை,

'பஞ்சினை ஊழித்தீப்போல் பலஜென்ம விவித வித்தாம்
சஞ்சிதம் எல்லாம் ஞானத் தழல் சுட்டு வெண்ணீறாக்கும்
கிஞ்சித் ஆகாமியந்தான் கிட்டாமல் விட்டுப்போகும்
விஞ்சின பிராரத்தத்தின் வினை அனுபவித்து தீரும்'

அடுத்ததாக நாம் தினந்தோறும் செய்யும் பூஜை முறை எப்படி உள்ளது என்று பட்டினத்தார் கூறுகிறார்

'கை ஒன்று செய்ய விழி ஒன்று நோக்க
கருத்து ஒன்று எண்ண பொய் ஒன்று வஞ்சக
நா ஒன்று பேச புலால் கமழும் மெய் ஒன்றும்
சார செவி ஒன்று கேட்க விரும்பும்
யான் செய்கின்ற பூஜை எவ்வாறு கொள்வாய் வினை தீர்த்தவனே'

மனம் ஒன்று பட்டு, பஞ்ச இந்திரியங்களை புறம் போகாமல் செய்கின்ற நிலைத்த பூஜையே மிகச் சிறந்தது அவ்வாறு இல்லாமல் செய்கின்ற பூஜையை இறைவன் எவ்வாறு ஏற்றுக்கொள்வான் என்று பட்டினத்தடிகள் கூறுகின்றார். மேலும்

'பிறவாதிருக்க வரம் பெறல் வேண்டும்
பிறந்து விட்டால் இறவாது இருக்க
மருந்து உண்டு காண் எப்படியோ
அறம் ஓர் புகழ்த் தில்லை அம்பல வாணர்
அடிக் கமலம் மறவாதிரு மனமே
அது காண் மருந்து உனக்கே'

நாம் இறைவனிடம் கேட்க வேண்டியது பொன்னோ ! பொருளோ ! மக்கட்செல்வமோ துன்ப நிவர்த்தியோ போன்ற அநித்திய விஷயங்களை கேட்காமல் மேலே சொன்னபடி பிறவாது இருக்க அருள் வேண்டும், என்றும் அப்படி யிருக்க தில்லையில் நடனமாடிக் கொண்டிருக்கும் அம்பல வாணரின் அடிக்கமலம் (திருப்பாதம்) மறவாதிரு மனமே என்று வேண்ட வேண்டும் ஏனெனில் 'பிறந்தது உண்டானால் பிறது சாவது தான் உண்டு.

உன்னால் அறியப்படும் பொருள்கள் உன்னை அறிய மாட்டாததால்
உன்னால் அறியும் பொருளெல்லாம் உனக்கு ஒரு விடயமாய் கண்டாய்
உன்னாலறியும் பொருளழியும் மொருக்காலும் நீ யழிவதில்லை
உன்னால் அறியும் பொருளை விடுத்து உன்னை விசாரித்து அறிவாய்

– ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள்

நம்மால் அறியப்படும் அநித்திய வஸ்துக்கள் நம்மையறிய மாட்டாது. நம்மால் அறியும் பொருள் எல்லாம் நமக்கு ஒரு விஷயமாய் காணலாம் நம்மால் அறியப்படும் அநித்திய வஸ்துக்கள் ஒரு காலத்தில் தோன்றி ஒரு காலத்தில் அழியும் எனவே அழியக் கூடிய பொருளைவிடுத்து அழியாத நித்ய வஸ்து ஆன்மாவை விசாரித்து அறிய வேண்டும்.

அறிவுக்கு, அறிவு செய்யும் அறிவு வேறு உண்டு; என்று எண்ணும்
அறிவற்றகுதர்க்க மூடர்க்கு அனவத்தைப், பலமாய்த் தீரும்;
அறிபடும் பொருள் நீயல்லை; அறிபடாப் பொருள் நீயல்லை
அறிபொருளாகும் உன்னை, அனுபவித்து அறிவாய் நீயே'

– கைவல்யம்-67

நீ நான் என்று இரண்டிலாமல், நிறைந்த பூரணமாய், எங்கும்
நானாகத் தெளிந்த ஞானம், நழுவுமோ குருவே? என்றான்;
தானாகும் பிரமரூபம், சற்குரு, நூலால், தோன்றும்;
ஆனாலும், தடைகள் உண்டேல், அனுபவம் உறைத்திடாதே.

– கைவல்யம்-81

நமக்கு அஞ்ஞானம் நீங்கி ஞானத் தெளிவு வரவேண்டும். எப்படியெனில் தெளிந்த நீரானது குளத்தில் இருந்தாலும் மேலே பாசிபடிந்து, தெளிந்த நீர் தெரியாமல் மறைப்பது போன்று, தெளிவற்ற அஞ்ஞான நிலையிலிருந்து பிறவிக் கடலில் தெளிவில்லாமல் தத்தளித்துக் கொண்டிருக்கின்றோம். இதிலிருந்து தெளிவு பெறவேண்டுமானால் திருமூலர் திருமந்திரத்தைக் கற்றுத் தெளிவு பெற வேண்டும்.

'தெளிவு குருவின் திருமேனி காணல்
தெளிவு குருவின் திரு நாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குரு உரு சிந்தித்தல் தானே'

தெளிவடைய சற்குருவின் திருமேனியை சதாகாலம் தரிசிக்க வேண்டும்
தெளிவடைய சற்குருவின் திருநாமத்தை சதா உச்சரித்தல் வேண்டும்
தெளிவடைய சற்குரு கூறுகின்ற திருவார்த்தைகளை கூர்ந்து கேட்டல் வேண்டும்
தெளிவடைய சற்குருவின் திருவுருவத்தை சதா சிந்தித்து இருத்தல் வேண்டும்.

முடிசார்ந்த மன்னரும் மற்றும் உள்ளோரும் முடிவில் ஒரு
பிடி சாம்பராய் வெந்து மண்ணாவதும் கண்டு பின்னும் இந்த
படி சார்ந்த வாழ்வை நினைப்பதல்லால் பொன்னின் அம்பலவா நின்
அடிசார்ந்து நாம் உய்ய வேண்டும் என்று அறிவோர் இல்லையே

– பட்டினத்தார்

எனவே எடுத்த தேகம் கீழே விழும் முன்னே நாம் யார்? எங்கிருந்து வந்தோம்? எதற்குப் பிறந்தோம்? எங்கே போகின்றோம்? இப்பிறவியை அறுப்பதற்கு வழியேது? என்று சற்குருவின் மூலமாகவும் சாஸ்திரம் மூலமாகவும் விசாரித்து சந்தேகங்களை விட்டொழித்து பூரண சொருபத்தில் நிலைத்து நிற்போமாக.

ஓம் தத் சத்
பரப்ரம்மனே நம:
குருவே துணை

அன்புடன்
குமரகுரு

## குருவின் வாழ்க்கை சரிதம்

எம் குருநாதர் உலகநாத சுவாமிகள் 1923 ஆம் ஆண்டு பெரிய பாளையத்தையடுத்த பனஞ்சேரியில் பிறந்தார். பிறகு சென்னையில் அரசு அச்சகத்தில் சுமார் 29 ஆண்டுகள் பணிபுரிந்து விருப்ப ஓய்வு பெற்று பல காலம் பல குரு பூஜைகளை செய்தும், பல சத்சங்கங்களில் சேர்ந்தும் இறைபணி ஆற்றினார். திண்டிவனம், விழுப்புரம், வேலூர், மகாதேவமலை, குடியாத்தம், போன்ற ஊர்களில் நடைபெற்ற குரு பூஜைகளில் சிறப்பு சொற்பொழிவுகள் ஆற்றுவார். இவ்வாறாக சுமார் 28 ஆண்டுகாலம் தம் குருநாதருடனும், தனியாகவும் அத்வைத பிரச்சாரம் செய்து அஞ்ஞானத்தில் இருந்த பாமர மக்களை ஞான நிலைக்கு உயர்த்த பெருமுயற்சி எடுத்தார்.

அவருக்கு வாழ்க்கையில் ஏற்பட்ட சோதனைகள் ஏராளம். உதாரணம், அவர்கள் வாழ்ந்த காலத்தில் தன் மனைவி, மூத்த மகன், மகள் இவர்களை காலன் அழைத்த போதும் சிறிதும் மனம் கலங்காதவர். மேலும் சில காலம் குடும்பத்தில் இருந்த பிரிந்து தனியாகவும் வாழ்ந்தார் . அவருடன் எங்களுக்கு சுமார் 20 ஆண்டுகள் தொடர்பு கிடைத்தது. ஞான நூல்களை அடிக்கடி போதித்தும் குரு பூஜைகளுக்கு அழைத்துச் சென்றும், வேதாந்த நூல்களை போதித்தும் எங்களை வழி நடத்தினார். ஸ்ரீ அச்சுதாசர் கீர்த்தனைகளை மிக அழகாகவும், பாவத்துடனும் அவர் பாடுவது சகலரும் அறிந்த ஒரு விஷயம் ஆகும். இவ்வாறாக இருந்த அவர் தம் 86-ஆம் வயதில் 2007-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 2-ஆம் தேதி மண்ணுலகை விட்டு சமாதி அடைந்தார்.

அவர் உரைத்த பொன்மொழிகள் :

1. வினையினால் தான் நமக்கு இந்த உடம்பு வந்தது. எனவே நமக்கு ஏற்பட்ட நல்வினை தீவினை அனுபவித்து தீர்த்து, ஆகாத வினைகளை செய்யாமல் இருந்தால் (ஆகாமியம்) உடம்பு வராத நிலையை அடையலம்.

2. பிறருடைய பொருளை நாம் விஷமாகக் கருத வேண்டும். எந்த காலத்திலும் எந்த நேரத்திலும் பிறர் பொருளை அடைய வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் இருந்தால், உன்னுடைய பொருள் ஒரு காலும் உன்னை விட்டு போகாது. மீறி அவ்வாறு நடந்தால் நம் முன் வினையினால் நடந்தது என்று கொள்ள வேண்டும்.

3. நம்முடைய பணம் சேமிப்பில் இருந்தால் இருக்கட்டும் அதை எப்போதும் நினைத்து கூட்டவோ பெருக்கவோ நினைத்துக் கொண்டிருக்கவேண்டாம். எப்போதும் அதையே நினைத்துக்கொண்டிருந்தால் அடுத்த பிறவியிலும் இந்த நினைவு தொடர்ந்து கொண்டிருக்கும்.

4. நாம் இந்த பிறவியில் நேர்மையாக பாடுபட்டு சம்பாதித்த பணமோ, நிலமோ போகங்களோ அனுபவிக்காமல், இடையில் இறக்க நேரிட்டால் தொடர்ந்து வரும் பிறவியில் அவைகளை அனுபவிக்க நேரிடும்.

5. நாம் பணக்காரனாவோ ஏழையாவோ பிறப்பது முன் செய்த புண்ணிய பாவ வசத்தினால் தான். இறைவன் எந்த விதத்திலும் காரணமாகமாட்டான். அவரவர் செய்த கர்மவினைப்படி ஏற்றத்தாழ்வுகள் நடைபெறுகின்றன.

6. நாம் பயப்படுவது தெய்வமோ அல்லது வினையோ என்றால், நாம் பயப்படுவது வினைக்குத்தான். ஏனென்றால் வினையினால் நமக்கு நன்மையும் தீமையும் ஏற்படுகின்றது. தெய்வம் சாட்சியாக அனைத்தையும் உருவிலா வடிவமாக பார்த்துக் கொண்டிருக்கிறது.

7. வினை யாருக்கு?

முடிவான நிலையில் வினை என்பது யாருக்கு என்றால் ஸ்தூல சரீரத்திற்கும் சூட்சம சரீரத்திற்கும் உள்ளடங்கிய அந்தக்கரணத்திற்குத்தான். உண்மையில் ஆன்மாவாகிய நமக்கு வினை கிடையாது. இவ்வனுபவம் ஆன்மாவில் மனம் லயமாக இருக்கும் போது வினை கிடையாது.

8. நாம் ஏன் பிறவித் துன்பத்திலிருந்து விடுபடவேண்டும்?

ஏனெனில் நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு என்ற ஐந்து வித துன்பங்கள் ஒவ்வொரு ஜீவனும் அனுபவித்துத் தீரவேண்டும். இது ஸ்தூலம் வந்த பிறகு அனுபவிக்கக் கூடியது. ஸ்தூலம் வருவதற்கு முன் ஜீவன் ஐந்து வித துன்பங்களை அனுபவிக்கின்றது.

அதாவது கருவறையில் இருக்கும்போது ,

1. காற்றுபுகா இருட்டறை.
2. துர்நாற்றம் மல மூத்திராதிகளின் வாசம் செய்கிறது.
3. ஜடராக்கினி என்ற சூட்டில் வதைப்படுகிறது.
4. சிறு பையில் நெருக்கி அவதிப்படுகிறது.
5. சிறு துவாரம் வழியாக அவஸ்தைப் பட்டு வெளிவருகிறது.

இதனால் தான் நாம் பிறவித் துன்பத்திலிருந்து விடுபட்டே ஆகவேண்டும்.

இவ்வாறாக குருநாதர் அருளிய மேற்கண்ட பொன்மொழிகளை நாமும் கடைப்பிடித்து வருவோமானால், பிறவா பெருநிலையை அடைய குருநாதருடைய அருள் கிட்டும்.

ஓம் தத் சத்
பரப்ரம்மனே நம:
குருவே துணை

அன்புடன்
குமரகுரு

### பல்லவி

ஆனாலும்யார்க்கு யார்சொல்லுவாரினி (ஆனா)

### அனு பல்லவி

தானாந்தனித் தலைமை
சாட்சியி னிலைமை (ஆனா)

### சரணங்கள்

ஞானாம்புதிசுக மோனாக்ருதியது
ஆனாலதாவரது வேநவிலுமிது (ஆனா)

கர்மசங்கர ஹித நிர்மநிலை நின்று
மர்மமிலங்கும்பர ப்ரம்மமின்னதென்று (அனா)

ஞாதுருஞானஞேய மேதுமின்றியெவைக்கும்
ஆதியாயுமகண்ட ஜோதியாயுநிற்கும் (ஆனா)

மோகப்பசையற்றது வாகியிரவுபகல்
ஏகமயமாயனு போகித்தறியாமல் (ஆனா)

பண்ணுலாநிகமங்க ளுண்ணிஜநெறிகொண்டு
தண்ணருளாரச்சுத விண்ணைக் கண்ணிற்கண்டு (ஆனா)

பல்லவி

காணக்கிடையாத தங்கம் அது (காண)

அனுபல்லவி

தோனும்பொழுதே பவபங்கம்
எங்கும் விளங்கும் (காண)

சரணங்கள்

சாதனையாயோதச் சாற்றிடுமாவேத
கீதம்வினோதம்சுபோத மனா தீதம் (காண)

மேலொளிநாதாந்த மெய்யுணர்வேதாந்த
மூலங்கல்லோலஞ்சுசீல மனுகூலம் (காண)

ஆந்துணைப்பொருளிக அச்சுததாசனக
சாந்தம் மாபாந்தம் வேதாந்த மின்னேகாந்தம் (காண)

கணபதி பதிப்பக வெளியீடுகள் இலவசமாகப் பெற விரும்புபவர்கள் கீழ்கண்ட விலாசத்தில் தொடர்பு கொண்டு பெற்றுக்கொள்ளவும்.


## கணபதி பதிப்பகம்

1/349, திருப்பூர் குமரன் தெரு, பாடியநல்லூர்,
சென்னை. செல் : 9444014117

1. சிவபுராணம் - முதற்பதிப்பு
2. சிவபுராணம் - இரண்டாம் பதிப்பு
3. சிவபுராணம் - உரைநூல்
4. விநாயகர் அகவல் - உரைநூல்
5. கீதை காட்டும் பாதை - விளக்கவுரை
6. கைவல்ய நவநீதம் - மூலமும் உரைவழிவமும்
7. நாநா ஜீவ வாத கட்டளை - உரைநூல்
8. சசிவன்ன போதம் - விளக்கவுரை
9. சுந்தரகாண்டம் - வசன கவிதை
10. சொரூபசாரம் - பாடலும் சிற்றுரையும்
11. பரமானந்த தீபம் - பாடலும் உரையும்
12. இந்தியதாய் ஈன்ற இணையற்ற கிராமங்கள்
தொகுப்பு-1, தொகுப்பு-2, தொகுப்பு-3
13. பச்சைக் கிளியே வா வா - குழந்தைப் பாடல்கள்
14. குருவிற்கு சமர்ப்பணம் - கட்டுரை நூல்

பதிப்பித்தோர் :

**கணபதி பதிப்பகம்**

1/349, திருப்பூர் குமரன் தெரு
பாடியநல்லூர், சென்னை 600052



தவத்திரு. உலகநாத சுவாமிகள்
(கிழக்குத் தாம்பரம், சென்னை)